2nd August 1965]

*Transfer of Panchayat Union School Teachers*

* 28 *Q.*—SRI M. RAJAH IYER : Will the Hon. the Minister for Local Administration be pleased to state the rules or norms under which the teachers in Panchayat Union Schools are transferred?

THE HON. SRI S. M. A. MAJID : இது சம்பந்தப்பட்ட விளக்க உரையின் நகல் [a] ஒன்று சட்டமன்றத்தின் பார்வைக்கு வைக்கப்பட்டிருக்கிறது.

SRI M. RAJAH IYER : Will the Government make sure that, where husbands and wives are both teachers, ordinarily they are not disturbed—because the teacher-couple would make an effective team of teachers—unless there are very exceptional reasons, and that they are retained in the same place?

THE HON. SRI S. M. A. MAJID : If particular cases are brought to the notice of the Government, they will be looked into.

**திரு. ஜி. கிருஷ்ணமூர்த்தி :** சர்க்கார் இப்போது கொண்டு வந்திருக்கும் முறையைப் பாராட்டுவதோடு, இதே முறையை டிஸ்ட்ரிக்ட் போர்டு உயர்தரப் பள்ளிகளுக்கு அமல் நடத்த முடியுமா என்பதை சர்க்கார் பரிசீலிக்குமா என்று கேட்கிறேன்.

**கனம் திரு. எஸ். எம். ஏ. மஜீத் :** சம்பந்தப்பட்ட இலாகா அமைச்சரைக் கேட்கவேண்டும்.

*Meenakshipet Co-operative Lift Irrigation Society*

* 29 *Q.*—SRI S. K. SAMBANDHAN : Will the Hon. the Minister for Local Administration be pleased to state—

(*a*) whether any subsidy or grant has been sanctioned for the Meenakshipet Co-operative Lift Irrigation Society in South Arcot district ;

(*b*) if so, the date of sanction of the grant ; and

(*c*) the date of disbursement of the amount?

**கனம் திரு. எஸ். எம். ஏ. மஜீத் :** (அ) துளைக்கிணறு தோண்டி, எண்ணெய் இஞ்சின் பம்பு செட் ஒன்றை நிறுவ இச் சங்கத்திற்கு 14,625 ரூபாய் கடனும், 4,875 ரூபாய் உதவித் தொகையும் அளிக்கப் பட்டன.

(ஆ) 22—11—1960-ல் கிராம வளர்ச்சி நிர்வாகத் துறையில் வெளியான 989-ம் எண் அரசாங்க ஆணையில் இவ்வுதவி அனுமதிக் கப்பட்டது.

(இ) கடன் தொகை 28-9-1962-ல் வழங்கப்பட்டது. உதவித் தொகை 22-3-1965-ல் வழங்கப்பட்டது.

**திரு. எஸ். கே. சம்பந்தன் :** இந்தக் கடன் தொகை அனுமதித்த தேதிக்கும் பணம் பட்டுவாடா செய்யப்பட்ட தேதிக்கும் வருஷக் கணக்கில் இடைவெளி இருந்தது என்பது அமைச்சர் அவர்கள்

---

a Printed as Appendix II on pages 138–139.